# உடம்பு

சிவனுக்கு இயற்கையாகவே உடம்பில் ரோமம் இல்லையா அல்லது அண்டம் அதிர ஆடும் முன்னர் கர்மசிரத்தையாக மழித்து விட்டுக்கொண்டாரா என்று தெரியவில்லை.

பாலா ரெட்டிக்கு இந்தச் சந்தேகம் பல முறைகள் எழுந்தது. மேடையில் ஏறும் முன்னர் ஸோப்பைத் தடவி மீசையை மழிக்கும் போதும்; சட்டைப் பித்தான்களைக் கழற்றி, மழமழக் கும் மார்பைப் பார்க்கும்போதும்.

இந்திரா குப்தா ஆடும்போதெல்லாம் கூட சிவனாகவும், கிருஷ்ண னாகவும் ஒத்துழைப்பது பாலா ரெட்டிதான். புருவங் களைத் தீட்டி, உதட்டுச் சாயம் பூசி, உடம்பெல்லாம் மினு மினுக்க, நாபியிலிருந்து ஜீவ ஊற்றாய்த்தாளம் பெருக அவன் ஆடுவான். ஆடி முடிந்ததும் மேடைக்குப் பின் வருபவர்கள் இவனைப் பார்த்து "பிரமாதம்" என்று ஒரு வார்த்தையில் கூறி இந்திராவிடம் "மயிலாட்டம் கெட்டது போங்க! அப்படி ஒரு துள்ளல், ஓட்டம், ஆர்வம்" என்று கூறும்போதும், அவனையும் மீறி அவன் நடையில், பேச்சில், உதட்டுச்சுளிப்பில் ஒட்டிக் கொண்டுவிட்ட பெண்மையை எண்ணி நாணும்போதும், சபையின் ஒரு மூலையில் "மேக்கப்போட்ட ஆம்பிளை" என்று சில கெக்கலிகள் உதிரும்போதும், நடனத்தின் ஆதாரம் ஓர் ஆண் தானா என்ற கேள்வி யோடு, தன் ஆண்மையைத்தனக்கே, விச்வரூபமாய் எழுந்து, நிரூபித்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்பட்டது.

அறையின் மூலையில் உட்கார்ந்துகொண்டு, முழங்கால் மேல் மோவாயைப் பதித்துத் தலையை நிமிர்த்தி தன் விச்வரூபங்களை அவன் நிதமும் ரஸித்துக்கொள்வான்.

கனத்த குரலோடு, முறுக்கேறிய உடலோடு அவன் – தெருவில் நடந்தாலே பெண்கள் தங்கள் கற்பைப் பாதுகாத்துக்கொள்ள விரையும்

பயங்கர உருவம். நடனமாடும் அவனைப் பற்றி "அந்த 'ஹோமோ'வா?" என்று கூறிய சொக்கலிங்கத்தின் சட்டைக் காலரைப் பற்றி இழுத்து "ஏய், யாருடா 'ஹோமோ'? உன் தங்கைக்கு உடம்புக்கு ஒன்றுமில்லையே?" என்பான்.

புஸு¬புஸு¬வென்று மயிருடன், தொடை, கால், மார்பு எல்லாம் கருமையோடு மேடையில் அவன். சபையில் எங்கும் பெண்கள், பெண்கள், பெண்களே. சிவனைப் பார்த்து உருகிய பக்தைகள் போல.

இரவில் மூக்கில் விரலை வைக்கும் லலிதா. "இப்படியும் ஒரு புலிப் பசியா?" என்று சிணுங்கும் லலிதா. புலியின் பசியில் தன் பசியையும் ஆற்றிக்கொண்டு, உடல் துவள உறங்கும் லலிதா. புலியாய் பாலா ரெட்டி.

உலகத்தின் சலங்கை ஒலிகளை எல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டு, ஒரு ராட்சச ஆமையாய் ஊர்ந்துவரும் அவன். கனத்த அழுத்தமான கோடுகளோடு உள்ள, தகர்க்க முடியாத பௌருஷத் தைப் போல ஆமை ஓடு.

நிதம் போல் அன்றும் தன் பிரம்மாண்ட ஸ்வரூபங்களைத் தரிசித்தாகிவிட்டது. காதைக் குடைந்துகொண்டான். அன்று பாரிஸி லிருந்து இருவர் அவனை ஒரு டாகுமென்டரி படத்துக்காகப் படம் எடுக்க வரப்போகிறார்கள். ஆண் நடனமாடுவதைக் காட்ட ஒரு உதாரணமாய் அவன். தாளத்தை ஆளும் பாலா ரெட்டி. ஏதோ ஒரு கலைச் சங்கம் செய்த ஏற்பாடு.

மாலை ஐந்து மணியிலிருந்து அவன் தயாராகத் தொடங்கினான். சிவப்பு நடன உடை. மார்பில் பெரிய ஹாரம். தடித்து வரையப்பட்ட புருவங்கள். சிவப்பு உதட்டுச் சாயம். கீழே தசைகள் விம்மும் இடத்தில் கங்கணங்கள்.

"லலிதா..."

"இன்னிக்கு ஒரு சின்ன ப்ரோக்ராம்"

அறைக்குள் எட்டிப் பார்த்துவிட்டுப் போய்விட்டாள் லலிதா. அவன் ஆடுவதில் அவளுக்கு ஓர் அலுப்பு. அவன் பெரிய வகுப்பு வைத்து, நட்சத்திரங்களுக்கும், மந்திரிமார் பெண்களுக்கும் நடனம் கற்பித்துச் சினிமாவில் நடன டைரக்டராய் வந்திருக்க வேண்டும் அவளைப் பொறுத்தவரை.

கலைச் சங்கக் கட்டிடத்தினுள் நுழைந்தான்.

6.30 மணி.

போட்டோ எடுக்கும் சாதனங்களுடனும் மற்ற கருவிகளுடனும் இருவர் வந்தனர்.

கலைச் சங்கக் காரியதரிசி வரவேற்றார்.

"இதுதான் ஆர்ட்டிஸ்ட்."

பாலா ரெட்டி எழுந்து வணங்கினான். கூப்பிய கைகளுடன். அவர்கள் இருவரும் அவனைப் பார்க்கவில்லை. புகைப்படம் எடுப் பதில் அவர்கள் நிபுணர்கள். புகைப்படம் எடுக்க அனுப்பப்பட்டவர் கள். ஆர்ட்டிஸ்டுடன் நேரத்தை வீணாக்குவதை அவர்கள் விரும்ப வில்லை.

பாலா ரெட்டி அமர்ந்தான்.

கலைச் சங்கக் காரியதரிசியை அழைத்தார்கள்.

"இந்த அறையில் வெளிச்சம் போதாது. கீழே உள்ள எக்ஸிபிஷன் ஹாலில் எடுக்கலாமா?"

காரியதரிசி போய் ஒரு ரிஜிஸ்தரை எடுத்துவந்தார்.

"அந்த அறைக்கு நாளுக்கு இருநூறு ரூபாய் வாடகை. ஏர்கண்டி ஷனர் 'ஆன்' பண்ணினா இருநூற்று ஐம்பது."

"நாங்கள் பேசின வாடகைக்கு மேல் ஒரு பைசாவும் தரமாட் டோம்."

"எங்களிடம் பேசின கான்ட்ராக்ட் பிரகாரம் ..."

"டாம் யுவர் கான்ட்ராக்ட்! ..."

"வாடகை ..."

"ஒரு பைசா கூட ..."

"ஏர் கண்டிஷனர் ..."

"எனக்குப் பிரதம மந்திரியோட அப்பாயின்ட்மென்ட் இருக் கிறது ..." வெறும் ஒலிகள், ஓசைகள். சிவந்த முகங்கள் விளக்கின் ஒளியில் நீலமாயும், ஊதாவாயும் மாற, சிறு பூனைக் கண்கள் ஒளிர, காரியதரிசியின் நீண்ட பற்கள் கருத்த முகத்தில் பளபளக்க, கைகளை மேலே தூக்கியும், காலைக் கீழே உதைத்தும், உதடுகளைக் குலுக்கியும், வளைத்தும், நாசி வியர்வையில் நனைய... வெறும் சப்தங்கள். குரங்குகள் பேசிக்கொள்வதைப் போல்.

மேக்கப்பும், பட்டு உடையுமாய் பாலா ரெட்டி வியர்வையில் நனைந்தான்.

படம்பிடிக்க வந்தவன் தன் கருவிகளைச் சேகரித்துக்கொண்டான்.

"நாங்கள் ரமாகலாவைப் படம் எடுப்போம். அவள் அழகாகவா வது இருக்கிறாள்."

போய்விட்டார்கள்.

"பாஸ்டர்ட்ஸ்" என்று வைதுகொண்டே காரியதரிசியும் போய்ச் சேர்ந்தார்.

அறையில் அமர்ந்துகொண்டிருந்தான் பாலா ரெட்டி. அறையெங்கும் விஷ்விஷ் என்று சாட்டையைச் சொடுக்கும் ஒலி ஆக்ரமித்துக் கொண்டிருப்பது போல் பட்டது. கண்ணுக்குத் தெரியாத, சொடுக்கப்படும் சாட்டைகள் இவனையே இலக்காக வைத்து வீசப்பட்டவை போல் தோன்றியது. இவன் உடம்பையே வெறுக்கும் ஆக்ரோஷத்துடன் அவை சீறிப் பாய்ந்தன. தோளில், மார்பில், இடையில், இடையின் கீழ், தொடையில், தீட்டப்பட்ட விழிகளில், பூச்சுடன் கூடிய இதழ்களில் – சாட்டையின் நுனி, கொட்டிக்கொட்டி உதிரத்தை உறிஞ்சியது.

அவளிடம் இருப்பது எல்லாம் நல்ல உணவைத் தின்றதால் பூரித்து, விம்மும் இரு மார்பகங்கள்தாம். அவள் ஆடும்போது அவள் கல்லூரியில் பாஸ்கட்-பால் சாம்பியன் என்பது நன்றாகத் தெரிகிறது என்று ஒரு விமர்சகர் எழுதியிருந்தார் ஒருமுறை. ஆனால் அவள் பெண். மேடையில் ஏறி, கலையைக் காலில் மிதித்து துவம்ஸம் செய்ய அது ஒன்றே போதும். சபை பார்க்க விரும்புவது அவளைத் தான்.

மெல்ல எழுந்து மேக்கப்பைக் கலைத்தான்; நகைகளைக் களைந்தான். உடையை மாற்றினான்.

வெளியே வந்து நடக்க ஆரம்பித்தான் வீட்டை நோக்கி. உடனே வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை.

பாராகம்பா தெருவின் முனையில் உள்ள பார்க்கில் அமர்ந்தான். உட்காரப் போகும் முன், "என்ன ரெட்டி, என்ன இந்தப் பக்கம்?" என்று ராமுவின் குரல் கேட்டது.

"சும்மாத்தான்."

"இங்கே ஒரு டான்ஸ் கச்சேரி. நாகலக்ஷ்மிங்கற பொண்ணு. அப்பா மினிஸ்டிரி ஆப் எடுகேஷன்லே டெபுடி ஸெகரட்டரி. நம்பளை விமர்சனம் பண்ணச் சொன்னார்."

"எப்படி ஆடறா?"

"அழகா இருக்கா. அப்பா கலைப் பைத்தியம். அம்மா நல்ல வித்வாம்சினி. முன்னுக்கு வந்துடுவா. அமர்க்களமா ஆடறா."

"யாரு?"

ராமு விழித்தார்.

"என்ன ரெட்டி? ஏதாவது பார்ட்டியா?"

"இல்லியே. என்ன ஆடினா பொண்ணு?"

"யாரு பாத்தா? அப்பா டெபுடி செகரட்டரி. அம்மா . . ."

"நல்ல வித்வாம்சினி."

"நீங்களே சொல்லிப்புட்டேளே?"

டெபுடி செகரட்டரி அப்பாவாக இல்லாவிட்டால் கூட ராமு விடம் நல்ல பெயர் வாங்கலாம். அவர் சுட்டிக்காட்டும் காரிய தரிசியிடம் ஒரு இரவு நடனத்தைப் பற்றிப் பேசினால் போதும். எந்த சபா காரியதரிசியும் பெண்ணாக – பாலாரெட்டியுடன் ஒரு இரவைக் கழிக்கும் பெண்ணாக – இல்லாதது பெரிய நஷ்டமே. தேவையெல்லாம் இரு மார்பகங்களும் ஓர் ஆணைத் தன் உடலில் நுழைத்துக்கொள்ளும் சக்தியுமே. பின்பே சலங்கையும், நடராஜரும்.

"அப்ப நான் கிளம்பறேன்."

"இந்திரா குப்தாவோட ஆடறச்சே சொல்லுங்கோ"

"ம்."

நடக்க ஆரம்பித்தான்.

"ஏதாவது பணம் குடுத்தாங்களா?" லலிதா கேட்டாள்.

"ப்ரோக்ராம் கான்ஸல் ஆயிடுத்து."

பண்ணுருட்டியிலிருந்து இரண்டு மைல் நடந்தால்தான் திருவ திகை போக முடியும். அவன் தினமும் போவான். மூல மூர்த்தியையும் அம்மனையும் பார்க்க அல்ல. கோயில் மூலையில் நீண்ட திண்ணை யுடன் உள்ள இடத்தில், ஒரு சாதாரணப் புலித்தோலை இடுப்பில் அணிந்து, எல்லாவற்றையும் மீறிக்கொண்டு வெளிவந்த சுதந்திரப் பெருமிதத்துடன் ஆடும் நடராஜரைப் பார்க்க.

"அப்பா, நான் பரதம் கத்துக்கறேம்பா."

"அடி செருப்பாலே! பொம்பிளையாடா நீ?"

தஞ்சாவூர் வரை ஓடி வந்து கற்றான். பின்பு டில்லிக்கு வந்தான். எல்லாம் அந்தப் புலித்தோல்காரன் ஊட்டிவிட்ட ஆசையில்.

"இன்னிப்போது இப்படி வீணாப் போச்சா?" லலிதா அலுத்துக் கொண்டாள்.

"நான் ஆடறேன். நீ பாக்கறியா?"

சிரித்தாள் லலிதா. பார்வை சட்டென்று பித்தான் திறந்த சட்டைப் பக்கம் சென்றது. அதன் கீழே வழவழத்த தொடைகள் மேல் அவள் கண் போகாவிட்டாலும், மனம் போகும். ஒன்றும் பேசாமல் தன் அறைக்குள் சென்று கிளாஸில் சிறிது விஸ்கியையும் தண்ணீரையும் விட்டுக்கொண்டான்.

சிறிது நேரத்தில் அறையில் கூரையைத் தொடும் ஓர் உருவம் நின்றது. உடம்பெல்லாம் சடை சடையாக மயிர். மயிரின் அடர்த்தியைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மெல்ல, மெல்ல இரு மார்பகங்கள் அதில் முளைத்தன. பாலா ரெட்டி இன்னொரு முறை கிளாஸை நிரப்பிக்கொண்டான்.

**'கணையாழி' நவம்பர் 1973**